# ஐக்கிய நாடு சபைக்குச் செல்வேன்


REGD. No. M. 6311 PHONE No. 55630

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் ஆசிரியர்: அண்ணுதுரை

The "Nam Nadu": A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F

தனி இதழ்: ஒரு அணு
இலங்கையில் 10 சதம்

சென்னை: புரட்டாசிமீ 7உ வியாழன் (23—9—54)
வெளியூர்: புரட்டாசிமீ 8உ வெள்ளி (24—9—54)

மலர்: 2
இதழ்: 87


# மக்கள் பட்டினியால் வாடுகிருர்கள்

## பிரதிநிதிகள் 'ரோல்ஸ் ராய்ஸ்' கார்களில் சுற்றுவதா?

## தூதுவர்களுக்கு கொழுத்த சம்பளம் ஏன்?

### இந்திய மேல் சபையில் கேள்வி

### குறைந்த செலவில் தனி இலாகா நடைபெறுகிறதாம்

பண்டிதரின் பதிலும், உறுப்பினர்களிடையே சொல்லம்பு வீச்சும்

வெளிநாட்டிலுள்ள இந்தியத் தூதுவர்களுக்கும், அதிகாரிகளுக்கும் கொடுக்கப்படுகிற 'கொழுத்த சம்பளம்' குறைக்கப்பட வேண்டுமென்று இந்திய மேல் சபையில் கம்யூனிஸ்டு உறுப்பினர் புபேஷ் குப்தா கூறினர்.

இந்தியா யாருக்கும் அடிமையாக வேண்டுமென்று தாங்கள் விரும்பவில்லை எனவும், ஆனல் இந்திய மக்கள் பட்டினியால் வாடும்போது இந்திய ஹைகமிஷனர்கள் 'ரோல்ஸ் ராய்ஸ்' கார்களில் சுற்றக்கூடாது என்றுதான் தாங்கள் கருதுவதாகவும், அவர், பண்டிதரின் குற்றச்சாட்டு ஒன்றுக்குப் பதில் அளிக்கும் முறையில் கூறினர்.

இந்தியாவின் வெளிநாட்டு தூதுவராலய அதிகாரிகளுக்கு சம்பளமாகவும், அலவன்சுகளாகவும் ஏராளமான பணம் கொடுக்கப்பட்டு வருவதைத் தடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கின்றனர் என்று இந்திய மேல்சபையில் உறுப்பினர் ஒருவர் கேட்டார்.

இக்கேள்வி பண்டித நேருவின் மனதை மிகவும் புண்படுத்திவிட்டதாம்! உடன் அவர் எழுந்து, இந்திய வெளிநாட்டு சர்வீஸ் உலகிலேயே மிகவும் குறைந்த செலவில் நடைபெறுகிறது என்றும், கம்யூனிஸ்டுகள், வெளிநாட்டு தூதுவராலயங்களை ஒழித்துவிட்டு, இந்தியா, ஒரு குறிப்பிட்ட நாட்டின் பின்னே சுழலும் நாடாக விளங்க வேண்டுமென விரும்புகிறார்கள் என்றும் கூறினர்.

உடன் கம்யூனிஸ்டு உறுப்பினரான சுந்தரையா எழுந்து, "காமன்வெல்த்தில் இருப்பதன் மூலம், இந்தியாவை நீங்கள் ஒரு வட்டத்தில் இருத்திவிட்டீர்கள்," என்றார்.

சுந்தரையாவின் இப்பேச்சுக்கு பின்னர் காங்கிரஸ் உறுப்பினர்களிடையே பலத்த எதிர்ப்பை உண்டாக்கியது.

சிலர், 'நீங்கள் ரஷ்யாவின் கைப் பொம்மைகள்,' என்று கூறுவது கேட்டது.

அதனைத் தொடர்ந்து சுந்தரையா, 'ஷட் அப்,' 'மூடு வாயை,' என்று கோஷமிட்டார்.

சபையில், 'வாயை வாங்கு,' 'ஒழுங்கு,' என்ற சொற்கள் ஒலித்தன.

'ஷட் அப்' என்று கூறிய கம்யூனிஸ்டு உறுப்பினர்களின் போக்கை எதிர்த்து, நேருவுக்கு அனைத் தலைவரிடம் புகார் செய்தார்.

பின்னர், சுந்தரையா, தான் 'ஷட் அப்' என்று நேருவைக் குறிப்பிடவில்லை என்றும், தனக்கு அருகே இருந்துகொண்டு மோசமான மொழியில் தன்மீது வசைமாரி பொழிந்த காங்கிரஸ் உறுப்பினர் இருவரைப் பற்றியே அப்படிக் குறிப்பிட்டதாகவும் கூறினர்.

சபையில் அமைதி நிலவியதும், பண்டிதர் இந்தியத் தூதுவர்களின் சம்பளத்தைக் குறைப்பதை விட அவர்களின் சம்பளத்தை அதிகரிக்கும் யோசனை சர்க்கார் வசம் இருப்பதாகக் கூறினர்.

இதை கண்டு காங்கிரஸ் உறுப்பினர்கள் கை தட்டினர்களாம். (நேருவின் இலாகா பற்றிய மற்றொரு விபரம் இரண்டாம் பக்கத்தில் வெளியாகி இருக்கிறது.)

## பிரெஞ்சிந்திய இணைப்பு

### செப். 29-ல் அறிவிப்பு

புதுச்சேரி, செப். 23—

புதுவை சர்க்காருக்கு பாரிசிலிருந்து பிரெஞ்சிந்தியப் பிரதேசங்களை இந்தியாவுடன் இணைப்பது பற்றி உத்தரவுகள் வந்துவிட்டன என்று தெரிகிறது.

இந்தியா—பிரான்ஸ் இரு நாடுகளின் கூட்டு அறிக்கை ஒன்று இப்பிரச்சினை சம்பந்தமாய் செப்டம்பர் 29-ந் தேதி யன்று வெளியாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இணைப்பிற்கான ஏற்பாடுகள் பற்றி செய்யவேண்டிய காரியங்களுக்கென்று புதுவை சர்க்காருக்கு கேபிள் மூலம் அறிவிப்பு கிடைத்திருப்பதாகச் சொல்லப்படுகிறது!

# தமிழர் பகுதிகளில் மலையாளிகளை குடியேற்ற திட்டம்?

## திரு—கொச்சி அமைச்சர் தயாரித்துள்ளார்!

### உடனடியாக 5000 குடும்பங்கள் குடியேற்றப்படுவர்!

நாகர்கோவில், செப். 19—

திருவாங்கூர்—கொச்சியில் உள்ள தமிழர்கள் பகுதியான தேவிகுளம், பீர்மேடு தாலுக்காக்களில் புதிய குடியேற்ற திட்டம் ஒன்றை திரு—கொச்சி தொழில் அமைச்சர் பி. கே. குஞ்சு தயார் செய்து அதை நிறைவேற்ற இருப்பதாகத் தெரிகிறது.

இத்திட்டத்தின்படி தமிழ் பகுதிகளில் 5,000 குடும்பங்கள் குடியேற்றப்படும் என்றும், முதலில் 1000 குடும்பங்கள் குடியேற எல்லா வசதிகளும் தரப்படும் என்றும், நிலமில்லாதவர்களுக்கு 5 ஏகர் வீதம் நிலம் அளிக்கப்படும் என்றும் தெரிகிறது.

சாகுபடிக்கும், வீடுகள் கட்டவும் கடன் உதவியும் செய்யப்படும்.

இத்திட்டம், இந்தத் திங்களில் கூடயிருக்கும் திரு—கொச்சி மந்திரி சபைக் கூட்டத்தில் அங்கீகரிக்கப்பட்டு, உடனடியாக அமுல் நடத்தப்படும் என்றும் தெரிகிறது.

# கொத்தலாவலை அச்சமூட்டுகிருர்

## இலங்கை—இந்தியர் பிரச்சினையில் ஆளுங் கட்சியில் கருத்துவேற்றுமை?

## நேருவை இலங்கை பிரதமர் சந்திப்பார்

### டட்லி சேனநாயகாவும் துணைக்கு வருவார்?

இலங்கை இந்தியர் பிரச்சினை குறித்து ஒரு திருப்திகரமான முடிவு ஏற்படாதுபோனல், ஐக்கிய நாடுகள் சபைக்குக்கூட இந்தப் பிரச்சினையை இலங்கை அரசாங்கம் எடுத்துச்செல்லும் என்று இலங்கைப் பிரதமர் சர் ஜான் கொத்தலாவலை தெரிவித்துள்ளார்.

இதற்கிடையில் இந்தப் பிரச்சினை குறித்த சென்ற வாரம் இந்திய—இலங்கை ஒப்பந்தத்தை அமுல் செய்வது பற்றி கொழும்புவில் நடைபெற்ற மாநாட்டின் பலாபலன்களை விளக்கி பண்டித நேருவுக்கு தாம் கடிதம் அனுப்பவிருப்பதாகவும், அக்கடிதத்தில் இந்தப் பிரச்சினையில் இலங்கையின் கருத்தையும் தெளிவாக அறிவிக்கவிருப்பதாகவும் கொத்தலாவலை தெரிவித்தார்.

மேலும் வருகிற அக். 7 முதல் 13-ந் தேதிக்குள்ளாக, பண்டித நேரு, இலங்கை அரசாங்க தூதுக்குழுவை இப்பிரச்சினை குறித்தும் பேச்சுவார்த்தைகள் நடத்தும் பொருட்டு டில்லியில் சந்திக்கும் படி சம்மதம் தெரிவித்திருப்பதாகவும் தகவல் அறிவித்தார்.

டில்லியில் பிரதமர் நேருவைச் சந்தித்து பேச்சுவார்த்தைகள் நடத்துகையில் தன்னுடன் துணையாக வருமாறு முன்னாள் முதன் மந்திரி சேனநாயகாவை, இன்னாள் பிரதமர் கொத்தலாவலை அழைத்தார்.

இலங்கை அரசாங்கக் கட்சியினர் அத்தனை பேரும், எவ்வளவு இந்தியர்களை இலங்கையைவிட்டு வெளியேற்ற முடியுமோ அவ்வளவு பேரையும் வெளியேற்றுவதில் ஒருமுகமான அபிப்பிராயம் கொண்டுள்ளனர்.

முன்னாள் வர்த்தக மந்திரியான ஆர். ஜி. சேனநாயகா என்பவர், பண்டித நேருவுடன் இலங்கைப் பிரதமர் பேச்சுவார்த்தைகள் நடத்துவதைத் தான் விரும்பவில்லை என்றும், இலங்கையில் உள்ள இந்தியர்களை நிர்ப்பந்தித்து வெளியேற்றும் வகையில், இந்தியர்களுக்கு வேலை தர மறுப்பது, உணவுப் பொருள் தர மறுப்பது போன்ற கொள்கைகளை இலங்கை அரசாங்கம் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

இலங்கை மக்கள் சபையின் சர்க்கார் கட்சிக் கூட்டத்தில், பேசுகையில் கொத்தலாவலை மேலும் குறிப்பிட்டதாவது:—

"முன்னாள் பிரதமரான சேனநாயகா, 'இந்திய, பாகிஸ்தான் குடியேற்றச் சட்டத்து விதிகளின்படி இலங்கையில் குடி உரிமை மறுக்கப்படுகிற எல்லா இந்தியர்களையும் இந்தியக் குடிமக்களாக இந்தியா ஏற்றுக் கொள்ளவேண்டும்; அம்மாதிரி இலங்கையில் குடி உரிமை மறுக்கப்படுகிற இந்தியர்களை இந்தியக் குடிமக்கள் என்று இந்தியத் தூதுவராலயம் பதிவு செய்து கொள்ள வேண்டும்; அப்படிச் செய்யாது போனல், இந்தியா—இலங்கை ஒப்பந்தம், ரத்து செய்யப்பட வேண்டும்; இந்தியத் தூதர் தேசாய் இதைச் செய்ய தொடர்ந்து மறுத்து வருவதால் இந்தியா—இலங்கை ஒப்பந்தம் அமுல் செய்யப்படாது நிறுத்தி வைக்கப்பட வேண்டும்,' என்று கருதுகிறார்.

ஆனல், தூதர் தேசாய், 'இலங்கைக் குடிஉரிமை மறுக்கப்...

(4-ம் பக்கம் பார்க்க)

# சென்னையில் பாங்கி ஊழியர் அடையாள வேலை நிறுத்தம்

## அமைதியாகவே நடைபெற்றது

(நமது தனி நிருபர்)

சென்னை நகரில் உள்ள பாங்கி ஊழியர்கள் இன்று ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர். தங்கள் கோரிக்கைகளை அரசாங்கத்திடம் வலியுறுத்துவதற்காகவே இவ்வேலை நிறுத்தம் நடைபெறுகிறது.

பாங்கி அப்பீல் டிரிபியூனல் அளித்த தீர்ப்பை சர்க்கார் மாற்றி அமைத்ததும் அதன் காரணமாக கருத்து வேறுபாடு கொண்டு தொழிலாளர் மந்திரி பதவியை திரு. வி. வி. கிரி ராஜினாமாச் செய்ததும் நினைவிருக்கலாம்.

பாங்கி சிப்பந்திகள் சம்பள விகித விஷயமாக, டிரிபியூனல் அளித்த தீர்ப்பை அமுல் செய்யுமாறும், அகில இந்திய பாங்கி சிப்பந்திகள் சங்கத்தை அங்கீகரிக்குமாறு கோரியும் ஒரு நாள் அடையாள வேலை நிறுத்...

(4-ம் பக்கம் பார்க்க)

Best copy available.

